



# ஆரோவில் செய்திமடல்

கிளை - 27 | ஏப்ரல் - 2024 | இலை - 7




மகாவீர் போதனைகள், திரிரத்தினங்கள் என்பனவாகும்.

**திரி ரத்தினங்கள்**

எந்த உயிரினத்துக்கும் தீங்கு ஏற்படாமல் பாதுகாக்க வேண்டும். எந்த நிலையிலும் உண்மையை மட்டும் பேசவேண்டும். திருட்டு எண்ணத்தை ஒழித்து செல்வம் மீது பற்றில்லாமல் இருக்கவேண்டும்.

ஒவ்வொரு உயிரினத்திற்கும் ஆத்மா உண்டு. நல்ல செயல்களுக்கு நல்ல விளைவு கிடைக்கிறது. தீய செயல்களுக்கு தீமையே சேர்கிறது. இதுவே, வினைப்பயன் எனப்படுகிறது. தீய வினை மாயையில் சிக்க வைக்கிறது. அது மேலும் துன்பத்தைத் தரும். துன்பங்களிலிருந்து விடுபடுவதற்கு வழிகள் உள்ளன. சரியான நம்பிக்கை, அறிவு, நடத்தையைக் கடைபிடித்தால் வாழ்வில் உயர்ந்த நிலையை அடையலாம்.

தீய வினை மாயையில் சிக்க வைக்கிறது. அது மேலும் துன்பத்தைத் தரும். துன்பங்களிலிருந்து விடுபடுவதற்கு வழிகள் உள்ளன. சரியான நம்பிக்கை, அறிவு, நடத்தையைக் கடைபிடித்தால் வாழ்வில் உயர்ந்த நிலையை அடையலாம்.

## மஹாவீர் ஜெயந்தி–21.04.2024



# திருக்குறள்

**இன்னா எனத்தான் உணர்ந்தவை துன்னாமை**
**வேண்டும் பிறன்கண் செயல் .** **(இன்னாசெய்யாமை 316)**

எதனைக் கொடுஞ்செயல் என நாம் உணர்கிறோமோ அதனைப் பிறர்மீது நாம் திணிக்கலாகாது.

உரை: **கவிஞர் சிற்பி**

## ஆசிரியர் பக்கம்

### திருக்குறளில் 'மொழி'

மொழி எனும் சொல்லினை நாம் நாள்தோறும் ஏதேனும் ஒருநிலையில் எழுத்திலோ, பேச்சிலோ வைத்திடுவோம். அதுவும் ஆசிரியத் தொழிலாளர்கள் சிறப்பு மொழிவகுப்பு, தமிழ்மொழி வகுப்பு, ஆங்கிலமொழிவகுப்பு அல்லது வேற்று மொழி வகுப்புகள் பற்றி அட்டவணைப்படுத்தி அறிக்கை சமர்ப்பித்து, தங்கள் பொறுப்புகளை நிறைவேற்றும் பொழுதுகளில் மொழி எனும் சொல் பெயர்ச்சொல்லாகவோ, மொழிதல் என்பதில் வினைச்சொல்லாகவோ வழங்கப்படுகிறது. இருந்தும், பள்ளி-கல்லூரிகளில் காலந்தோறும் நிகழும் தொடர்வினையாடல்கள்தாம் பயிற்றுமொழி, சிறப்புமொழிச் சிக்கல்கள் எனலாம். தமிழ்மொழிப் பாதுகாப்பு மாநாடுகள், தமிழ்மொழி அறிஞர்களைப் பாராட்டும் மன்றங்கள் மற்றும் படைப்பாளர்கள் சங்கங்களில் மொழிப்போர், மொழித்திணிப்பு போன்ற கூட்டுச்சொற்களில் மொழி வலம் வருவதுண்டு. கேட்டு நெகிழ்கிறோம் நெளிகிறோம், நெக்குருகுகிறோம். மொழி என்பது பாஷை மட்டும் இல்லை. இனமானம், பண்பாடு, பழைமை மரபு புதுமை எல்லாவற்றையும் உள்ளடக்கிய இருஎழுத்து மந்திரம் ஆகும். இன்று இலக்கிய அவைகளில் மட்டுமின்றி அரசியல் மேடைகளிலும் அதிகக் கவனம் பெறும் பெரும்புலவர் திருவள்ளுவர் என்பதறிவோம். மொழியப்படும் போதனைகளும் திருக்குறள் வாயிலாகவே என்ற ஊடக வண்ணங்கள் தமிழ் மக்களைச் சுற்றிச்சுற்றி வளைக்கும்போது "மொழிப்பற்று" பெருமையுடன் பாடிக்கொள்கிறது. தமிழர் நாங்கள் என்றும் கூத்தாடிக்கொள்கிறது. பாரதி வாக்கில் உலகினுக்கே நாம் தந்துவிட்ட வள்ளுவர் எந்தமொழிக்காரர்? சர்வநிச்சயமாகத் தமிழ்நாட்டில் பிறந்து வளர்ந்து திருக்குறளை இயற்றிய தமிழர்தான் என்பதில் நமக்கு இருவேறு கருத்துகளுக்கு இடமில்லை. ஆனாலும் நமது ஏழைத்தமிழ்நெஞ்சு ஐயன் "தமிழ்", "தமிழகம்" என்று ஓரிடத்திலாவது ஒரு குறிப்புச் சொல்லைப் பெய்திருக்கலாகாதா என்று கொஞ்சம் ஏங்கிக்கொள்கிறது.



## அன்னையின் பிரார்த்தனை

நீயோ இப்புவிக்கு அதிபதி. நின் தர்மமோ சிறிதும் பிறழாது செயற்படுகிறது. நின் பணிக்கு எது மிகவும் நல்லதோ அதுவே நிகழ்கிறது என்று பாரிஸை விட்டுப் புறப்படும்போதே நீ எனக்குப் புகட்டினாய் அன்றோ !.

நின் வல்லமை இருள், பிழைகளையெல்லாம் அடக்கி, பொய்மைச் சக்தி, அதன் வெற்றித்தோற்றம் இரண்டையும் ஒழித்து, ஓர் அற்புத சாசுவத சூர்யோதயமாக விளங்குகிறது. நேர்மையின் முழு ஒளியை நோக்கி ஓரடி முன்னேறியுள்ளோம். எல்லாம் ஒளிவு மறைவு இன்றி கண்ணுக்கெட்டுகிறது. நின் ஆட்சிக்கு இதுவே முதற்படி அல்லவா ?

நினைத்தற்கரிய ஐசுவரிய பிரபாவமே, அஞ்ஞானத்தையெல்லாம் வெல்ல வல்ல பெருமானே, ஆணவத்தையெல்லாம் ஒழித்து, எங்கள் உள்ளங்களுக்கு ஒளி தந்து, எங்கள் மனத்திற்கு வெளிச்சம் தரும் பேரறிவே, பேரருளே, அனைத்திற்கும் இருக்கையே, நின் ஐக்கியத்தில் நிரந்தரமாய் வாழ்ந்து நின் திருஉளப்படி நான் நடக்க அருளாயோ, இறைவா !

இப்புவிக்கு அதிபதியாம் ஆண்டவனே, மோன வழிபாட்டில் நின்னை நான் வணங்குகின்றேன்.

அன்னை

புதுச்சேரியில் நிரந்தரமாகத் தங்கி யோகவாழ்வினை ஏற்க ஸ்ரீஅன்னை வந்தித்த நாள் 24 ஏப்ரல். ஆஸ்ரம சிறப்பு தரிசன நாட்களுள் ஒன்றாகும்.

நமக்குத் தெரிந்த குலச்சாமிகளின் பெயரைச் சொல்லாமல் பொதுவாக இறைவனையும் தெய்வத்தையும் பேசுகிறவர் "தமிழ்" எனும் தனது சொந்தமொழிபற்றி ஏதும் குறிப்புத் தராததும் திருவள்ளுவரின் தனித்துவத்தையே உணர்த்துகிறது. எனும் நிலைப்பாட்டிற்குவர எனக்குப் பல காலம் தேவைப்பட்டுள்ளது.

இருந்தும் திருக்குறளில் "தமிழ்" எனும் சொல் வராவிட்டாலும் மொழி எனும் சொல்லாவது வந்திருக்காதா என்று தேடிக்கண்டடைந்த எனது வாசிப்பு அனுபவத்தைப் பகிர்ந்து கொள்வதில் மனமகிழ்ச்சி இச்சூழலில் இறங்கி ஒளிர்கிறது.

திருக்குறளில் ஐந்து குறட்பாக்களில் **மொழி** வருகிறது.

நிறைமொழி
மறைமொழி
கடுமொழி
பணிமொழி *(இருமுறை)*

என்றும் மொழிதல் எனும் வினைச் சொல்லாக ஒருமுறையும் ஆழ்ந்த பொருள்கொண்டு மொழியப்பட்டுள்ளது.

மொழிகூறும் குறள்பாக்களைப் படித்தறிவோம் வாருங்கள்.

**(1) அத்தியாயம் 3. நீத்தார் பெருமை**

**குறள் – 28**

"நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்"

பொருள் – சான்றோர்கள் பயனை விளைவிக்கும் பொருள் நிறைந்த மொழிகளையே வெளிப்படுத்துவர். அவர்தம் பெருமையை, நிலவுலகில் அவர்கள் தம் ஆணையாற் சொல்லிய மறைமொழிகளாம் திருமந்திரங்களே கண்கூடாகக் காட்டிவிடும்.

(திருக்குறள், திருமந்திரம், திருமுறை, திவ்யபிரபந்தம் அனைய அனைத்துக்கும் இது பொருந்தும்)

**(2) அத்தியாயம் – 30 வாய்மை**

**குறள் – 295**

"மனத்தொடு வாய்மை மொழியின் தவத்தொடு
தானம்செய் வாரின் தலை.

பொருள் – தன்மனத்தோடு பொருந்துமாறு வாய்மையுள்ள சொற்களையே ஒருவன் பேசுவானாயின் தவமும் தானமும் செய்பவர்களைவிட மேலானவன் ஆவான்.

**(3) அத்தியாயம் – 57 வெருவந்த செய்யாமை**

**குறள் – 567**

"கடுமொழியும் கைஇகந்த தண்டமும் வேந்தன்
அடுமுரண் தேய்க்கும் அரம்"

பொருள் – கடுஞ்சொற்களும் குற்றத்தை விடக் கூடுதலாகச் செய்யும் எல்லை கடந்த தண்டனையும் அரசனது பகையை வெல்லும் வலிமையாகிய இரும்பினைத் தேய்க்கும் அரம் ஆகும்.

**(4) அத்தியாயம் – 113 காதற் சிறப்புரைத்தல்**

**குறள் – 1121**

"பாலொடு தேன்கலந்தற்றே பணிமொழி
வால் எயிறு ஊறிய நீர்.

பொருள் – மென்மைமிகு சொற்களைப் பேசும் என் காதலியின் வெள்ளிய பற்களிடையே ஊறியநீர், பாலுடன் தேனைக் கலந்தாற் போன்ற சுவையுடையதாகும்.

**(5) அத்தியாயம் – 126 நிறையழிதல்**

**குறள் – 1258**

"பன்மாயக் கள்வன் பணிமொழி அன்றோநம்
பெண்மை உடைக்கும் படை"

பொருள் – பலவிதமான மாயங்களைச் செய்து மயக்கும் காதலனது தாழ்ந்த, மென்மையான இனிய சொற்கள் அல்லவா நம் நிறை என்னும் பெண்மைப் பண்பாகிய கோட்டையை அழிக்கும் படையாகும்.

இவ்வாறாக அறம், பொருள், இன்பம் எனும் முப்பாலின் ஊடாக "மொழி" எனும் சொல் 5 இடங்களில் மந்திரமாகும் மணிமொழியாக வருவது அறிய நிறைவு கூடுகிறது. பேசவேண்டிய வாய்மையுள்ள மொழி, பேசக்கூடாத சினம்காட்டும் சிறுமொழி, இனிமையான காதல்மொழி எனக் கருத்துடன் கூறப்படுகிறது.





இக்கூற்றினை மேலும் விரிவாகப் பேச இடம் உள்ளது என்றாலும் சுருங்க வைத்து விரித்துரைக்கும் அரிதினும் அரிதான நூல் நமது திருக்குறளாயிற்றே எனவே எனது ஆய்வினை மேலும் படித்து விரித்தெடுக்கச் செல்வோர்க்காக இடம் கொடுத்து நூலகம் திரும்புகிறோம்.



**எல்லாரும் நலமுடன் வாழ்க**
**இனிய மொழியுடன்!**
**இரா.மீனாட்சி**

## அரவிந்தர் சிந்தனைப் பொறிகள்

மனிதர் வெற்றியை நாடியே உழைக்கின்றனர்: தோல்வியடையும் நற்பேறு அவர்களுக்குக் கிடைத்தால் அதற்குக் காரணம், அவர்களுடைய பகுத்தறிவின் சாமர்த்தியத்தை மீறி இயற்கையின் விவேகமும் ஆற்றலும் செயல்படுவதேயாகும். நற்பயனளிக்கும் வகையில் தோல்வியுறுவதையும் விவேகத்துடன் பெரும்பிழை புரிவதையும் எப்போது, எவ்வாறு செய்யவேண்டும் என்பது இறைவனுக்குத்தான் தெரியும்.



# அரவிந்தர் – 150
## ஆரோவில் தில்லைகணபதி படைத்தளிக்கும் அரவிந்தம்

"நான் – ஒரு கவிஞன்
அரசியல்வாதி
ஆனால்...தத்துவமேதை அல்லன்!"
–இது அவரது சுயவிமர்சனம்.
மகாபாரதத்தின்
ஒரு கிளைக்கதை– சாவித்ரி
*சூரியக்கடவுளின் புதல்வி
*அதி உண்மையின் உறைவிடம்
* 23800 உயிர்ப்பு வரிகள்
* உலக மகாகாவியம் –சாவித்ரி
ஸ்ரீஅரவிந்தரின்
சுயவரிகளில்
கூறினால்
"மனித அறிவுக்கு எட்டாத
பிரபஞ்ச இரகசியங்களை
அறிந்த கவிஞன் எழுதிய
பெருங்கவிதை"
மகாசமாதி
1950 டிசம்பர் 5
ஸ்ரீஅரவிந்தருக்கு
அவரின் யோகத்தின்
அடுத்த கட்டத்தின்
நிறைவுப்பகுதி
நிறைவேறிய நாள்.
அவர் ஸித்தியடைந்தார்.
அவர் தம்
புற உடலைவிட்டு
நீங்கினார்.
அப்போது
சத்திய ஜீவசக்தி
அவரது
உடலில் தங்கியிருந்து
பொன்னொளி வீசியது.



**(நிறைந்தது)**

# வானூர் மண்டலம்

முன்னர் தொண்டைமண்டலம் பின்னர் தென்ஆர்க்காடு மாவட்டம் இன்று விழுப்புரம் மாவட்டம் சார்ந்த புதுவை - தமிழ்நாட்டு எல்லையில் உள்ள பகுதி வானூர் ஆகும். நமது ஆரோவில் சர்வதேச நகரம் வானூர் ஒன்றியத்துக்குள் முகிழ்த்துள்ளது. இப்பகுதியில் முன்னர் 18க்கும் மேற்பட்ட சிவாலயங்கள் வழிபாட்டுத் தலங்களாகச் சிறப்புற இருந்துள்ளதென சிவபக்தர்கள் கூறிவருகின்றனர். ஆதாரங்களையும் எடுத்து வைக்கின்றனர்.

மறைந்து, வீழ்ந்து, சிதிலமானவைபோக, இன்றளவும் சிவனடியார்களை ஈர்த்துவரும் மூன்று பழமையான திருக்கோயில்கள் ஆரோவில் அருகே, வானூர் மண்டலத்தின் புகழ்நிலங்களாக விளங்குகின்றன. மூன்று அருளாலயங்களுமே திருஞானசம்பந்தரால் பாடல்பெற்றுள்ள திருத்தலங்களாகும். சோழர்காலக் கோயில்கள், பழைய கல்வெட்டுகள் இவற்றைப் படித்துத் தெரிந்துகொள்ளவும், நம்மைப் புதுப்பித்துக்கொள்ளவும் இக்கோவிலூர்ப் பயணங்கள் உறுதுணையாகும் எனும் உயர் நோக்கங்களுடன் கோயில் பண்பாடு பற்றிய கருத்தரங்குகளுடன் இணைத்து இரும்பை மாகாளம், அரசிலி (ஒழிந்தியாம்பட்டு) திருவக்கரை ஆகிய மூன்று ஆலயங்களுக்கும் மூன்று சனிக்கிழமைகள் பிற்பகலில் அரங்கக் கருத்துரை நிறைத்துப்பின், ஞானத்தமிழ்த்தேடல் நிகழ்வாக திருத்தலப்பயணமும் மேற்கொண்டோம். ஒவ்வொரு நிகழ்விலும் கல்லூரி, பள்ளி மாணாக்கர்கள், கிராம இளைஞர் குழுவினர், மகளிர் மன்றத்தினர், ஆரோவில்வாசிகள் என சுமார் 120 கருத்தாளர்கள் கலந்துகொண்டு பயனடைந்தனர்.

ஆரோவில் நிறுவனம் அளித்த ஆதரவுடன் புதுவை அருங்காட்சியகம், சென்னை செம்மொழி இயக்ககம், இளைஞர்கள் கல்வி மையம் ஒன்றிணைந்து தமிழ்க்கூடல் ஞானத்தேடல் பதாகை ஏந்தி ஆன்மிகச் சுற்றுலாவினை தலைமேற்கொண்டோம்.



16.03.2024 இரும்பை மாகாளம்.

இரும்பை மாகாளம் செல்லுமுன் ஆரோவில் யூனிட்டி அரங்கில் சென்னையைச் சேர்ந்த சகோதரிகள் திருமதி மங்கையர்கரசி, திருமதி அருள்மொழி இணைந்து திருஞான சம்பந்தர் வரலாறு கூறி, பதிகங்கள்பாடி இன்னிசைப்பொழிவு நடத்தினார்கள். செம்மொழி இயக்ககத்திலிருந்து வந்திருந்த பேராசிரியர் முனைவர் அருள்ஒளி, அறிமுகவுரை ஆற்றினார்.

புதுவை அருங்காட்சியகம் சார்பில் தேவாரம் தொடர்பான நூல்கள் காட்சிப்படுத்தப்பட்டன. சென்னையிலிருந்து சிறப்பு விருந்தினராக வந்திருந்தார் செல்வன் சிவகலசன். இளம் (13)வயதிலேயே சிவனருளால் நூல்கள் எழுதியிருப்பதை ஆரோவில் தமிழ்க்கூடல் பாராட்டியது சிறப்பு. சிறுவனின் சிற்றுரை நோக்கர்கள் அனைவருக்கும் புத்துணர்வு தந்தது. பெரியமுதலியார்சாவடி பஞ்சாயத்து ஒன்றிய நடுநிலைப்பள்ளி மாணாக்கி செல்வி அரிஷ்னியின் ‘சிவோஹம்’ நாட்டியம் சிறப்பாக அமைந்தது. ஆசிரியர் பா. ஆனந்து நிகழ்ச்சிகளை ஒருங்கிணைத்தார். புதுவை அருங்காட்சியகப் பொறுப்பாளர் திரு. அ. அறிவன் நன்றி நவின்றார். சிறு இடைவேளைக்குப்பின் திருவுலா தொடங்கியது.

இரும்பை மாகாளம் சென்றடைந்ததும் திருக்கூட்டமாகக் கோவிலை வலம்வந்து



ஒவ்வொரு சன்னதியிலும் பண்ணிசைத்து இறைச்சூழலை உருவாக்கினர் நம் மக்கள். பெரும்புலவர் வில்லியனூர் வேங்கடேசன் அய்யா அவர்கள் கற்றளிச் சுவர்களில் மிச்சம் மீதியிருந்த கல்வெட்டுகளை வாசித்துக் காட்டினார். இத்திருக்கோயிலின் வரலாற்றினை அறிந்துகொள்ள பேருதவியாக அமைந்தது

பொன்மாலை நேரத்தில் கல்மண்டபத்தின் வெளிப்பிராகாரத்தில் கலைநிகழ்ச்சிகள் அர்ப்பணிக்கப்பட்டன. நாதஸ்வர இசை நிகழ்ச்சியுடன், தேவாரப்பதிகங்களை இசைத்தோம். செல்வி.அ.தமிழ்த்தாமரை, நடராஜப்பெருமானின் கூத்தினை ஆடினாள். பார்வையாளர்கள் பரவசமடைந்தனர். புதுவை இந்திராகாந்தி தேசிய மரபுக் கலை மையம் மண்டல இயக்குநர் முனைவர் ஜி. கோபால் நடனமணியைப் பாராட்டியும் நிகழ்வின் அருமைகளைச் சீர்தூக்கியும் நற்பொழிவு ஆற்றினார்.

இரும்பை மாகாளீஸ்வரரையும் குயில்மொழி அம்மையையும் வழிபட்டு, கடுவெளிச் சித்தர் தரிசனம் முடித்து, கோவிலுக்கு வந்துசெல்லும் மக்களுடன் இணைந்து பிரசாதம் பெற்றுக்கொண்டு பிரிய மனமின்றி விண்மீன்களின் ஒளித் துளிகளுடன் வீடுதிரும்பினோம்.

தெப்பக்குளத்து மீன்கள் துள்ளி விளையாட ஆரம்பித்த நேரம் அது!.

**தமிழ்க்கூடல் குழு**

(தொடரும்)

# சித்திரை மாதமும் சித்திரமேழியும்

கோடைகாலம் சித்திரை மாதம் தமிழ்ப் புத்தாண்டின் தொடக்கம். நிலத்தை உழுது மண்ணைத் தொழுது ஆண்டு முழுதும் வளமான உயிர்உணவுகளை வாரி வழங்க மாரியையும் வணங்கி வேளாண் குடிகள் எடுக்கும் விழா 'பொன்னேர் உழுதல்' என்னும் 'சித்திரைமேழி' ஓட்டும் திருநாள் ஆகும். இது பற்றிய பல குறிப்புகள் சங்ககாலம் தொட்டே வழங்கி வருகின்றன. இன்றளவும் பல கிராமங்களில் நடைமுறையிலும் உள்ளன என்றும் தகவல்கள் கிடைத்து வருகின்றன.

இளங்கோவடிகள் இந்நிகழ்வினை ஏர்மங்கலம் எனக் குறிப்பிடுகின்றார். பொன்னேர் பூட்டல் என்பது தமிழகக் கொங்குதேச வேளிர் தலைவர்களாலும், தாய்லாந்து, கம்போடியா, இலங்கை மற்றும் பர்மா தேச மன்னர்களாலும் தொடர்ந்து நடத்தப்பெறுகின்றது என்று பேராசிரியர் பாவாணர் தமது தமிழர் வரலாறு நூலில் பதிவிட்டுள்ளார்.

நல்லநாள் பார்த்து முதன்முதலாக ஏர் பிடித்து, சித்திரை மாதத்தில் செய்யும் முதல் உழவு கோடை உழவு, புழுதி உழவு என்றும் அழைக்கப்படுகிறது. அப்போது வேளாண் குடிமக்கள் ஏரினை வாழ்த்தி விவசாயம் நன்கு செழிக்கப்பாடும் பாட்டினையே 'ஏர்மங்கலம்' என்பார்கள். இதனையொட்டியே சித்திரை மாதப் பிறப்பன்று பூட்டும் முதல் உழவுக் கலப்பைக்கும், ஏர்முனைக்கும் பொன்மணி யாக நெற்குவியலைப் படைத்தளிக்கப் பூசையிட்டு வாழ்த்தி நன்றி கூறும் சிறப்பினையே 'பொன்னேர் பூட்டுதல்' என்று கூறுவதாக மக்கள் வழக்கில் உள்ளது.

வரலாற்று வழியில் பார்த்தால், 'சித்திர மேழி பெரியநாட்டார் சபை' என்பது தென்னிந்தியாவில் உழவுத்தொழிலை அடிப்படையாகக் கொண்ட வேளாண் மக்களின் வணிகக் குழு என்று கி.பி.13 ஆம் நூற்றாண்டு 'சித்திரமேழி' கல்வெட்டு கூறுகின்றது. மேலும், நமக்கு கிடைத்துள்ள அபூர்வமான சூரியன் தொடர்பான சில தகவல்கள்:

*தமிழ்க்குடி உழவர்கள் தங்களுக்கான வேளாண் கால வழிகாட்டியைத் துல்லியமாகக் கணக்கிட்டுள்ளனர். சூரியன் மிகச்சரியாகக் கிழக்குத் திசையில் உதிக்கும் நாள்தான் சித்திரை1. எனவேதான், சித்திரை முதல்நாளை புத்தாண்டு நாளாகக் கொண்டாடி வருகின்றனர் (In the science it is called Equinox). பிறகு ஆடி 1. சூரியன் வடகிழக்குப் புள்ளியில் தோன்றும் நாளாகும் (Solstice).*

*மறுபடியும் சூரியன், கிழக்கிற்கு வரும் நாள் ஐப்பசி 1(again Equinox). தீபாவளி கொண்டாடும் காலமிது. மீண்டும் துல்லியமாகச் சூரியன் தென்கிழக்கில் தோன்றுவது தை 1. (Solstice). தை மாதம் முதல் நாள் பொங்கல் வைத்துக் கொண்டாடுகிறோம்*

*வானியல் மாற்றங்களையும் அதனைச் சார்ந்த பருவகால நிகழ்வுகளையும் நன்குணர்ந்தே நமது மக்கள் வேளாண் பணிகளில் ஈடுபட்டார்கள். திருவிழாக்களையும் கொண்டாடினார்கள்.*

*அந்தந்தக் காலத்திற்கேற்றப் பண்டங்களைத் தயாரித்து உணவாகவும், ஆரோக்கிய வாழ்விற்கேற்ற மருந்துகளாகவும் வழங்கினார்கள்.*

*நம்முடைய இந்தத் தலைமுறையினருக்கு நமது மரபு சார்ந்த விழாக்களின் அடிப்படையே "விஞ்ஞானமும் மெய்ஞானமும்"தாம் என்பதை உணர்த்த வேண்டியது தெளிந்த அறிவுடையோரின் கடமையாகும்.*

*இந்தத் தகவல்களைத் தேடும் முன்முனைப்பினை நமக்கு அளித்தது ஆரோவில் அருகில் உள்ள எயில்பட்டினம் எனும் கடற்ரையோர மூத்த ஊரான மரக்காணத்தில் கிடைத்துள்ள ஒரு கல்வெட்டுக் கூறும் "பொன்னேர் பூட்டுதல்" எனும் பதிவாகும்.*

*இது சூரியனுடன் மட்டுமல்லாது திங்களின் வருகையையும் குறிப்பதாகவும் உள்ளதென, தமிழ் ஆய்வாளர் திரு.சுகுமாறன் அண்ணாமலை கூறுகிறார்.*

தகவல்: சி.வி.ரமேஷ் கருணாகரன்

சிறுவர் இலக்கியம்

# கோடைச் சிறப்புப் பாடல்கள்

(1) பாப்பா
உன்பேரு என்னம்மா?
என் பாட்டியோட பேரு
உன் பாட்டியோட பேரு என்னம்மா?
எங்க பூட்டியோட பேருதான்!

*********************************

(2) தம்பீ
உன் பேரு என்ன?
எங்க தாத்தாவோட பேரு!
உங்க தாத்தாவோட பேரு என்ன?
என்னோட பேருதான்!.

***********************

(3) கோவில் கோபுரம்
மிக உயரம்
பொம்மைகள் அதிலே
பல ஆயிரம்
பறந்து வருது
வெள்ளைப்புறா
உட்கார வருது
மாடப்புறா
வருது வருது
மாடப்புறா – ஒண்ணு
மாடப்புறா – ரெண்டு
மாடப்புறா – மூணு
நாலு அஞ்சு ஆறு
ஏழு எட்டு ஒன்பது
பத்துப் பத்தா மாடப்புறா
பறந்து வருது மாடப்புறா

*******************************

(4) அசைந்து வந்தது ஆனை
மணியடிச்சு வந்தது ஆனை
சத்தம் கேட்டு வந்தது மைனா
மைனாவுக்குப் பயமில்லை
ஆனைமேலே ஏறிக்கிச்சாம்
ஊர்வலமாய்ப் போயிக்கிச்சாம்
ஆனை மேலே மைனா
மைனா மேலே மின்மினி
ஆனை
மைனா
மின்மினி
வாங்க கூடப் போகலாம்

வாங்கித் தின்னக் கடலைமிட்டாய்
காசு அண்ணன் தருவாரே.....

(5) அது என்ன?,
பெரிய தண்ணீர்
அதன் பெயர் கடல்
அது என்ன?
பெரிய பாறை
அதன் பெயர் மலை
அது என்ன
பெரிய விளக்கு
அதன் பெயர் சூரியன்.

மதுரைமகள்.





## அறிவோம் நம் தமிழ் - XIX
## தமிழில் பழந்தமிழ்க் கலைச்சொற்கள்

**HISTORY - சரித்திரம்**

வரலாறு
கடந்தகால நிகழ்ச்சிகளின் கோர்வை
பதிவு
எடுத்துரைப்பு
கதை
நினைவுத்தொகுப்பு
திறம்
பாயிரம்

**HOLE-** துளை
குழி
புழை | பள்ளம்
ஒளிவிடம் | பொந்து
தொள்ளல் | தொள்ளை
தொளை | பூகம்
பூழ் | முழைஞ்சு.

நன்றி: ஆங்கில - தமிழ் வகுப்பிற்குப் பயன்பட்ட அகராதி.
International Advanced Deluxe Dictionary.

## தனிச்சுற்றுக்கு மட்டும்

வளியீடு : ஆசிரியர் குழு
ஆரோவில் செய்திமடல்
இளைஞர்கள் கல்வி மையம்
ஆரோவில் - 605101
விழுப்புரம் மாவட்டம்
தமிழ்நாடு
ன்னஞ்சல் : tamil@auroville.org.in
தாலைபேசி : 0413-2623773
சிரியர் : இரா.மீனாட்சி
டிவமைப்பு : சொ.அருணன், புதுவை.
ச்சு : சூர்யா பிரிண்ட் சொலூசன்ஸ், சிவகாசி.

